வெளியீடு எண் 11.

# சித்தாந்தச் செம்பொருள் விளக்கம்





திருவிடைமருதூர்
ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்
1961

வெளியீடு எண் 11

உ
சிவமயம்

# சித்தாந்தச் செம்பொருள் விளக்கம்

இஃது

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து
இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி

திருவிடைமருதூர்
ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானத்தில்
வெளியிடப்பெற்றது.

1961



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்ருவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்**

உ
சிவமயம்

# முகவுரை

---

சைவசித்தாந்த சாத்திர சம்பந்தமாகத் தமிழில் உள்ள நூல்கள் யாவும் செய்யுள் வடிவிலும், சூத்திர வடிவிலும் அமைந்து விளங்குகின்றன. அவைகள் யாவும் ஆசாற்சார்ந்து அமைவுறக் கற்கும் நிலையி லேயே உள்ளன. சில நூல்கள் உபதேசமுறையில் அறிய வேண்டுவனவாகவும் உள்ளன.

தமிழில் சைவசித்தாந்த சம்பந்தமான உரைநடை நூல்கள் சித்தாந்தப் பிரகாசிகை, பதிபசுபாசவிளக் கம், சித்தாந்த வசனபூஷணம், சைவசித்தாந்த சார சங்கிரகம் என்னும் நூல்கள் ஆகும். இவைகள் யாவும் இச்சிறு நூல் எழுதுவதற்குத் துணையாக இருந்தன.

சிவஞானபோதம் முதலாய அரிய ஞானநூல் களைப் பயிலவேண்டும் என்பார்க்கு அதனுடைய சிறந்த கருத்துக்கள் எளியநடையில் வெளிவந்தால், அதன்மேல் அந்த ஞானநூல்களைப் பயிலவேண்டும் என்ற உணர்ச்சி தற்கால இளைஞர் உலகில் உண்டா கும் என்பது எளியேனுடைய நீண்ட நாளைய உட் கிடக்கை. அந்நினைவின் காரணமாக எளியநடையில் என்னால் எழுதப்பட்டதே 'சித்தாந்தச் செம்பொருள் விளக்கம்' என்னும் இச்சிறுநூலாகும்.

இச்சிறுநூலுள் பொருளியல், பதியியல், பசு இயல், பாச இயல், முத்தியியல் என்று ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஏற்ற அளவு அதன் கருத்துக்களும் விளக்கப்பட்டுள்ளன.

இச்சிறந்த பொருள்பற்றிய இந்த நூலினை எளியேனை எழுதுமாறு அருளாணையிட்ட திருவாவடுதுறை ஆதினத்து 21-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் பெருங்கருணையை எண்ணி வந்தித்து வழிபடுவதைத் தவிர வேறு என்செயவல்லேன்.

தற்காலநிலை கருதிப் பலவகையான சாத்திர, தோத்திர நூல்களை அச்சிட்டு இலவசமாக மக்களுக்கு வழங்கி வருகின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள், இந்நூலை மூன்றாவது ஆண்டு திருமுறைப் பாராயண நிறைவு விழாவில் ஸ்ரீ மஹாலிங்கசுவாமி தேவஸ்தான வெளியீடாக வெளிவர அருளாணையிட்டமைக்கு அடியேன் அடிபணிந்த வணக்கத்தை அவர்களுடைய பொன்னார் திருவடிகட்குச் சமர்ப்பிக்கின்றேன்.

இங்ஙனம்,

திருவிடைமருதூர்.
சார்வரி, தை.

பொன். சுப்பிரமணிய பிள்ளை,
தலைமைத்தமிழாசிரியர்,
திருவாவடுதுறை ஆதீன உயர்நிலைப்பள்ளி.



ஸ்ரீ மகாலிங்கப்பெருமான்

உ

சிவமயம்

# சித்தாந்தச்செம்பொருள் விளக்கம்

## 1. பொருளியல்

### பொருளுண்மை

இறைவனால் மிகுப்பழமையாக அருளிச்செய்யப் பெற்ற நூல்கள் வேதங்கள், ஆகமங்கள் என்பன. இவைகளை நமது முன்னோர்கள் முதனூல்கள் என்று கூறுவர். இவற்றின் வழிநூல்களும், சார்புநூல்களும் மிகப்பலவாம். இம்முதனூல் சார்புநூல்கள் யாவும் இறைவன், உயிர், மலம் என்னும் மூன்று பொருள்களின் உண்மைகளை நன்கு சிறப்பித்துக் கூறுகின்றன.

மேலே கூறிய இறைவன், உயிர், மலம் ஆகிய மூன்று பொருள்களையும் நிச்சயித்து உணர்வதற்குச் சில ஏதுக்களையும் பழமையான நூல்கள் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளன. அவைகள் அனுமான அளவை, ஆகம அளவை, காட்சி அளவை ஆகிய மூன்று பிரமாணவகையுள் அடங்கும். இம்மூன்று பிரமாணங்களின் துணைகொண்டே உயிர்கள் சிவப்பேறு அடைகின்ற தன்மையை நாம் மிக எளிதில் உணரமுடியும்.

சிவம் என்னும் செம்பொருள் என்றும் ஒருபடித் தாக நிலைத்திருப்பது. அச்சிவம் ஆன்மாவைத் தன் சார்பாக்கி நிரந்தரமான அடிமையாகக்கொள்ளும். உயிர் என்றும் அறியாமையோடு கூடியிருக்கும். உயிரினிடத்துள்ள அறியாமை என்னும் இருளை ஆண்டவன் ஒருவனே போக்கக்கூடியவன். ஆகவே உலகில் சிவம், ஆன்மா, அறியாமை என்னும் மூன்று பொருள்களும் என்றும் அழியாமல் ஒருபடித் தாக நிலைத்து இருக்கும். ஆன்மா வீடுபேறடையுங் காலத்தும் இம்முப்பொருள்களும் நிலைத்தேயிருக் கும். இதனை, "வல்லிமலகன்மம் அன்று உளவாம்" என்னும் மெய்கண்டார் வாக்கே வலியுறுத்தும்.

இவையேயன்றி, சிவஞானசித்தியாரில் கூறப்பட் டுள்ள உவமையும், மேலே கூறியுள்ள உண்மையை வலியுறுத்தும். மாயையென்பது கன்ம அனுபவ வினை களால், இடையிலே இறைவனால் கொடுக்கப்பட்டு அவ்வினைமுடிவில் அழிக்கப்படும். அவை எவ்வாறு எனில்? பஞ்சினைத் திரித்து நூலாக்கி நெய்யப்படு வது ஆடை. ஆடை நெய்யும்போது கஞ்சிமுதலான பொருள்கள் மேல் பூசப்படுவதால் அவ்வாடையில் அழுக்கேறும். அவ்வாறு அழுக்கேறிய ஆடையை வெளுப்பவன் உவர்மண் சாணி இவைகளில்நனைத்து, முன்னரே அந்த ஆடையைப் பற்றியுள்ள அழுக் கினைப் போக்கித் தூய வெள்ளைநிறமுடையதாக ஆக்குவான்போலாம்.

இந்நிலைபோன்று இறைவனும் பழமையாகவே ஆன்மாவைப் பற்றியுள்ள ஆணவமாதி மலங்களை அகற்றுவான். அந்த நிலையில் மாயை முதற்காரண மாக விளங்கும்; தனு, கரண, புவன, போகங்கள் காரியமாக விளங்கும். பின் ஆன்மாவைப்பற்றியுள்ள

மூலமலமாகிய அழுக்குக் கழுவப்படும். பின்னர் ஆன்மா பக்குவப்பட்ட நிலையை அடையும். பக்குவப் பட்ட நிலையிலே பிறப்பு இறப்புக்குக் காரணமான கன்மவினை ஆன்மாவிடம் இன்மையால், மாயையும் மாயேயமும் அழிய, ஆன்மாவை அருள் அவத்தை யாகிய பரிசுத்த நிலைமையில் வைத்துப் பக்குவப் படுத்தி, சிவமாந்தன்மைப் பெருவாழ்வினை அளிப் பான். ஆகவே மலநீக்கமுற்றுழி ஆன்மா சிவமாந் தன்மை அடையும் என்பதே சித்தாந்தத்தின் ஒத்த முடிபாகும்.

சிவாகமங்கள் சித்தாந்தநூல்கள் ஆகிய யாவும் உலகில் நிலைபெற்று விளங்குகின்ற பொருள்களின் உண்மைகளை அறுதியிட்டுக் கூறுகின்றன. அவைகள் மலம், கன்மம், மாயை என்னும் மூன்று பொருள்க ளோடு மாமாயை, திரோதாயி என்னும் இரண்டை யும் சேர்த்து ஐந்து பொருள்களாகக் கூறும். இவை களால் செயல்படுவன பஞ்சகிருத்தியங்கள் ஆகும். ஆன்மாக்கள் சிறப்பாக மூவகைப்படும் என்று சிவாக மங்கள் எடுத்துக்கூறுகின்றன.

ஐவகை மலங்களுள் ஒன்று கன்மமலம். ஆன்மா, என்றும் பழமையாகவே மூடமுடையது. ஆன்மா விடம் இயல்பாக அமைந்துள்ள மூடத்தன்மையைப் போக்கி உயிருக்கு என்றும் சிறந்த துணையாக இருப்பது சிவம் என்னும் செம்பொருளாம்.

ஆன்மா சிவத்தை எப்போது மறந்து மலங்களைப் பற்றி வாழ்கின்றதோ அன்றே அவ்வான்மாவைக் கன்மம் பற்றியதாகும். அதுவே ஆன்மா செய்யும் குற்றமாகும். கன்மத்தைச் சிவாகமங்கள் நல்வினை, தீவினை என்று இருவகைகளாகப் பகுத்து உரைக் கின்றன. இவைகளையெல்லாம் ஆன்மா பற்றுதபடி

வாழவேண்டுமானுல், நல்லாசானேச்சார்ந்து நல்லுபதேசங்கள் பெறுவதேயாம். அவ்வுயரிய குணமுடைய நல்ல ஆசான் தன்னிடமுள்ள தவவலிமையினுலே, ஆன்மாவை இயல்பாகப்பற்றிய பழவினேகளேயெல்லாம் கெடுத்து மேலான பரமுத்தியை அடையுமாறு செய்வான். ஆகவே இருவினேகளுக்கும் காரணமாகிய மூலகன்மம் முடிவில் இல்லாது கெட்டு ஒழியும். மூலகன்மம் என்பது ஆன்மாவிடம் இடையில் தோன்றி இடையிலேயே அழிந்துவிடும் என்பது ஆன்ருேர்களின் துணிபாம்.

உயிர், முடிவில் இறைவன்திருவடியினே அடைய வேண்டியதே. அதற்கு ஆன்மா பக்குவநிலே அடைய வேண்டும். பக்குவநிலே அடைந்தால்தான் ஆன்மா சிவத்தினே அடையமுடியும். மலத்தின் இயல்பு, என்றும் ஆன்மாவினேப் பற்றிநிற்பதேயாம். மலமோ உலக உற்பத்திக்காலத்தில் தோன்றி முடிவுக்காலத்தில் அழியுந்தன்மையினேப் பெறும்.

இம்மாயையின் தோற்ற அழிவிற்கு நம் முன்னேர்கள் இந்திரசாலம், கனவு, பேய்த்தேர் ஆகியவற்றை உவமையாகக் கூறுவர். இந்திரசாலமாவது முன்பு இல்லாத ஒருபொருளினேச் சாலஞ்செய்து வருமாறு செய்வது. கனவு என்பது இடையிலே தோன்றி இடையிலேயே மறைந்துபோவது. பேய்த்தேர், கடும்பகலில் வெய்யிலினது கடுமைபற்றித் தோன்றி, அவ்வெய்யில் மேகத்தால் மறைப்புண்ணுங்கால் மறைவது. மேலேகூறிய இந்த மூன்று பொருள்களும் தோன்றி மறைவதேயாகும். அதே போன்று ஆன்மாவைப்பற்றிய மாயைகளும் இறைவனது அருளாகிய மேகத்தால் ஆன்மாவிடை இல்லாது ஒழியும். அன்றியும் மாயையானது ஆன்மாவிடம்

கன்ம அனுபவங்கள் உள்ளவரை இருந்தேதீரும். பழவினை காரணமாக ஆன்மா எத்துணை பிறவியெடுப்பினும் அப்பிறவிதோறும் கன்ம அனுபவம் இருந்தே தீரும் என்பது முடிந்த உண்மை. இவ்வுண்மைகளைச் சிவஞான உணர்வுடையோர் நன்குணர்வர்.

இதன்மேல் ஆன்மா, மாமாயை என்னும் கன்மத்தினின்றும் விடுபடவேண்டும். மாமாயையாவது இறைவன் பழமையாகவே ஆன்மாவின் அனுபவ அறிவினைக்கொண்ட அறியாமைநிலையை விட்டொழிக்கும்படிச் செய்தலேயாம். இவ்வறியாமை ஒழிந்தால் இறைவனோடு அவனே தானாகுமாந்தன்மைப் பெருவாழ்வினை ஆன்மா அடையும். ஆகவே இறைவன் ஆன்மாவினைப்பற்றி வாழும் மாமாயையினைப் படைப்புக்காலத்தில் விரித்துச் சங்காரகாலத்திலே ஒடுக்கி விடுவார்.

இதனை அடுத்துக் கூறப்படுவது திரோதாயி என்னும் மலமாம். இம்மலமும் சிவம் என்னும் செம்பொருளின் திருவருட்பெருக்கேயாம். இத்திருவருள், என்றும் உயிரின் ஞானத்தினையும் செயலினையும் மறைத்து வாழும் ஆணவத்தை ஒடுக்கும். ஆணவம் ஒடுங்கிய நிலையில் ஆன்மா, அறிவு செயல்களின் விளக்கத்தினை இயல்பாகப் பெறும். அவ்விளக்கத்தினை அடைந்த ஆன்மா அவ்வவற்றிற்குரிய கன்மங்களை என்றும் நுகரும். இந்தத் திரோதாயிமலமும் இடையில் தோன்றி அழிவதேயாம்.

அடுத்து இறைவனின் பஞ்சகிருத்தியங்கள் இன்னவையென்று உணரவேண்டும். இறைவன் பல வேறு வடிவங்களையேற்றுச் செய்கின்ற செயல்களே ஐவகைத் தொழில்களாகும். அச்செயல்கள் யாவும்

படைப்புக்காலத் தொடக்கத்தில் உள்ளவைகளே யாம். ஆன்மா எவ்வாறு மலத்தைப் பழமையாகப் பெற்றுள்ளதோ, அதுபோன்று இறைவனுக்கு ஐந்து தொழில்களும் பழமையாக உள்ளதேயாம்.

இனி, உயிரின்தன்மையையும், அவற்றின் பேதங் களையும் ஒருவாறு உணர முற்படுவாம். உயிர்களின் இயல்பு சார்ந்ததன் வண்ணமாவது. அந்நிலையில் உயிரானது சதசத்து என்னும் பெயரினைப் பெறும். சிவம் சத்துப்பொருள், ஆன்மா அசத்துப்பொருள், ஆன்மாவினைப் பற்றுவது பாசம், ஆக இம்மூன்றனை யும் சார்ந்ததே சதசத்து என்பதாம்.

மேலே கூறிய இச்செயல்களையெல்லாம் ஆன்மா இயல்பாகவே பெற்று வாழும்; இவைகளிலிருந்து சிவம் என்ற ஒருபொருளே என்றும் பற்றற்ற உணர் வினைப்பெற்று வாழும் என்ற உண்மையை உணர்ந்து ஒருவாறு முடிவிற்கு வரலாம்.

ஆன்மாக்கள் வேதாகமங்களின் உட்பொருளினை நல்ல ஆசானை அடைந்து, அவன் குறிவழி நின்று முறைப்படி உணரவேண்டும். அவ்வாறு உணர்ந்தால் ஆன்மாக்கள் அடையும் ஐவகை முத்திநிலையினையும் உணரலாம். ஆன்மாக்கள் இவைகளை உணர்ந்த நிலை யில், மேலேகூறிய அழியாத மூவகைப்பொருளுமே வேதாகமங்கள் அறுதியிட்டுக்கூறும் சிறந்த பொருள் கள் என்னும் உண்மையை உணரலாம். அம்மூன்று பொருள்களுமே என்றும் பழமையாகவுள்ள பொருள் களுமாம்.

இந்த மூன்று பொருள்களின் உண்மையையும், இலக்கணங்களையும் பசு பாசஞானங்களினுல் ஆன்மா அறியவொண்ணுதாகும். உண்மையறிவு என்னும்

சிவஞான உணர்விஞல்தான் அறியமுடியும். பின்னரே பொருள்களிடத்துள்ள முடிந்த உணர்வு ஆன்மாவிற்கு இயல்பாகத் தோன்றும். இவற்றை ஞான நூலுணர்வுகொண்டு ஒவ்வொருவரும் சிந்தித்து உணரவேண்டும். அவ்வாறு சிந்திப்போமாயின் சிவம் ஆன்மா என்னும் இரண்டுபொருளும் பழமையாகவே உடையன என்ற முடிவிற்கு நாம் வருதல்கூடும். ஆன்மாவே ஞானம் கிரியை என்னும் இச்செயல்களை அடைந்து, விடாமல் அவற்றை அனுபவிக்கும். ஆயினும், அவ்வான்மாவின் பழமையான நிலைமையை நோக்க மலமும் அதனைச்சார்ந்த ஒரு பொருளேயாம் என்னும் உண்மையை உணர்ந்தேயாகவேண்டும் என்பதாம்.

மேலே கூறிய மூவகைப் பொருள்களும் நிலைத்ததே என்று ஒரு முடிவிற்கு வரலாம். அன்றியும் முன்னர்க் கூறியுள்ள கன்மம், மாயை, திரோதாயி, ஐவகைத்தொழில், மூவகை ஆன்மா ஆகிய இவைகளின் உண்மையினையும் நாம் உணரவேண்டும். இவைகளெல்லாம் ஆன்மாவின் முத்திக்காலத்திலே நிலைத்து நில்லாவாயினும், முன்னர்க்கூறிய மூன்று பொருள்களும் என்றும் அழிவில்லாது நிலைத்து நிற்பனவேயாம். இவற்றினின்று பொருள்களின் உண்மை நிலையை நாம் ஒருவாறு உணரலாம்.

# உ. பதியியல்

---

சிவமே உலகிற்கு முழுமுதற்பொருள் என்று சிவ ஞானபோதம் முதலாய ஞானநூல்கள் கூறுகின்றன. சிவன் என்றும் தன் அருட்சத்தியோடு கூடியேயிருப் பான். அருளாகிய சத்தியோடு கூடியுள்ள சிவனே, திருவருள் என்னும் சுவற்றிலே, உலகமாகிய அழகிய ஓவியத்தை எழுதுவர். அவ்வாறு தீட்டிய ஓவியத்தை முடிவில் அவரே அழிப்பார். இக்காரணங்களால் அவரே என்றும் உலகத்திற்கு ஒரே தலைவராவார்; அவரையொழிய வேறுதலைவர் உலகத்திற்கு இல்லை என்ற முடிவிற்குவர இவ்வுண்மைகள் வலியுறுத்தும்.

சிவபெருமான் தானே தனித்தநிலையில் இருந்து, தன் திருவருளாகிய சுவற்றில், உலகங்களையெல்லாம் தோற்றுவித்தார் என்ற முடிவு நம்மனோர் அறிவிற் குப் பொருந்துகின்ற ஒன்றேயாம். ஆயின் பிரமன், விட்டுணு முதலிய தேவர்கள், படைத்தல் காத்த லாகிய தொழில்களைத் தன்னிச்சையாகச் செய்தா ரல்லர் என்ற உண்மை இதனல் வலியுறுத்தப்படும். அவ்வகையில் அவ்விருவரும் தங்கட்குரிய படைத் தல் காத்தல் தொழில்களை இறைவனின் ஐந்தொழில் வன்மையால்தான் அவனிடத்தில் பெற்றுக்கொண்டு செய்யலானர்கள் என்பதே ஒப்பமுடிந்த உண்மைக் கருத்தாகும். இருக்கு முதலாய வேதங்களும் மேலே கூறிய இவ்வுண்மையினையே வலியுறுத்துகின்றன. ஆகவே இறைவன் தனது சங்கற்பமாத்திரையானே ஐந்தொழில்களையும் செய்கின்ருர் என்ற முடிவிற்கே அறிவுடையோர் வருவர்.

இனி, உயிர்கள் பல வேறுபாடுடையன. பதியோ ஒன்று. அவ்வொன்ருகிய பதிக்கே ஐந்து தொழில் களைச் செய்கின்ற உரிமை உண்டு. அவ்வாருகவே இறைவனுகிய ஒரு பொருளுக்குப் பல பெயர்கள் உள்ளமையை நூல்கள் வலியுறுத்திக் கூறுகின்றன. ஆயின் நாம் தலைமையுடையேம் அல்லேம், அவரே தலைமையுடையோர் என்ற வேறு வேறு பெயரினை உடையோர் பிரம, விட்டுணுக்கள் ஆவர். இவ்விரு வரும் தனித்தனியே இயல்பாகத் தொழில்செய்யும் ஆற்றல் அற்றவர் ஆவர். மேலும் கருத்தா இரண்டு வகைப்படும்:- அவை இயற்றுதற்கருத்தா ஏவுதற் கருத்தா என்பனவாம். அவ்விருவகைக் கருத்தாக் களுள் ஒருவன் ஏவுதற்கருத்தாவாக ஒருதொழிலைச் செய்யச்சொல்வுழி, அவன்வழிநின்று அந்தத் தொழி லினைச் செய்வோர் பலரும் கருத்தாக்களாகிவிடுவர். அந்தவகையில் இருவரையும் ஒருவாறு கருத்தாக் களாக்கிக் கூறலாம். ஆயின் சிவத்தைப் போன்று இவர்கள் எத்தொழிற்கும் உரிய கருத்தாக்கள் ஆக மாட்டார்கள் என்பதாம். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூவகைத் தொழிலினையுஞ்செய்யும் பிரம, விட்டுணு, உருத்திரர்களைப் பிரமம் என்று சொல்லுதல் கூடாதாகும்.

அன்றியும், திருமாலும் பிரமனும் சிவபரம் பொருளது அடிமுடிகளைத் தேடியும் காணமுடிய வில்லையென்பது புராணவரலாறு. அத்தகைய சிவன் தனதருளை ஓர் பெண்ணுருவாக்கித் தனது இடப் பாகத்தே கொண்டுள்ளார். இவ்வாறு திருவருளை இடப்பக்கத்தே கொண்டுள்ள நிலையில் அவர் வீற் றிருக்கின்ற இடமோ, எவராலும் அணுக ஒண்ணுத திருக்கயிலாயமாகும். கயிலாயம் என்பது தத்துவம் கடந்த அருள்நிறைந்த இடமாம். இதனை இருவினை

யொப்பு, மலபரிபாகம் சத்திநிபாதம் பெற்ற சிவ ஞானிகளே உணர்வர். மேலும் தற்போத முனைப்பு அற்றார்க்கே அவ்விடத்தை எளிதில் அடையும் நிலை கைவரப்பெறும். ஆன்மாக்கள் தற்போத முனைப்பு அற்றால் சிவபோத ஞானநிலைபெற்றுச் சிவஞானம் கைவரப்பெற்ற நிலையை அடையும். இந்த நிலையினைச் சித்தாந்த நூலறிவு பெற்றுள்ள பெரியோர்கள் நன்கறிவார்கள்.

இனி ஆன்மாக்கள் விஞ்ஞானாகலர், பிரளயா கலர், சகலர் என்னும் மூவகையினராவர். விஞ்ஞான கலர் என்பார் ஆணவமலம் என்னும் ஒருமலத் தொடக்கு உடையவர். இவர்கள் மலபரிபாகமுற்ற நிலையிலே சிவபெருமான் திருவருளினைப்பெற்று வீடு பேற்றினை எளிதில் அடைவர்.

பிரளயாகலர் என்பார், மாயை கன்மங்களாகிய இருவினைத் தொடக்கினால் அலைப்புண்டு, உலகிடைத் தோன்றுவர். அவ்வாறு தோன்றிய நிலையில் தமது தவபலத்தால் நால்வகைச் சத்திநிபாதம் பெறும் உரிமையினைப் பெறுவர். இவ்வுண்மைகளையெல்லாம் சித்தாந்த நூல்கள் விரிவாக எடுத்துக்கூறும்.

சகலராவார், மும்மலத்தொடக்கு உடையோர். இவர்களும் உலகிடைத்தோன்றி நல்வினை தீவினைகளை ஏற்றமுறையில் அனுபவித்து, முடிவில் இறைவன் திருவடியினை அடைபவர்களேயாவர்.

ஆன்மாக்கள் முன்னரே செய்த நல்வினையால் அவைகள் என்றும் இறைவனையே அடையவிரும்பும். அத்தகைய இறைவனின் சிறப்புநிலையை உலகுக்கு அறிவிக்க விரும்பினாள் இறைவி.

திருக்கயிலையில் இறைவி இறைவனை நோக்கித் 'தேவரீர்! தங்களது மாருப் பெருமையினை எனக்கு விளக்கியருளல்வேண்டும்' என்று பணிவுடன் வேண்டினுள். உடன் இறைவனும் தன்னுடைய பல்வேறுபட்ட திருவுருவங்களும் திருவருள் ஆற்றலேயாகும் என்று கூறியருளினுர். உடன் அம்மையாருக்குத் திருவருளாகிய தன்னையன்றி உலகம் தனித்து இயங்க ஒண்ணுது என்ற தருக்கு உண்டாயிற்று.

இறைவியின் தருக்கினை உணர்ந்தான் இறைவன். உடன் தனது திருவருள் இயக்கத்தினைச் சிறிது மாற்ற மனங்கொண்டான். அவ்வாறு திருவருள் மாற்றம் ஏற்பட்ட நிலையில், ஆன்மாக்கள் யாவும் செயலற்று அறியாமையென்னும் இருளிலே ஆழ்ந்தன. அறியாமையில் அழுந்திய ஆன்மா இறைவனருளால்தான் உய்திபெறமுடியும் என்பதை உணர்ந்தாள் இறைவி. அவ்வாறு அம்மை எண்ணியநிலையில் ஒரு முடிவிற்கு வந்தாள். முடிவின் பயனுக அம்மை திருவிடைமருதூரை அடைந்து தவக்கோலங்கொண்டு இறைவனை அருச்சனைசெய்து வழிபடலானுள். இறைவனும் அம்மைக்குக் காட்சிகொடுத்து, வேண்டிய வரங்களையும் வழங்கினுர். ஆன்மாக்களும் இறைவியின் அருளால் பழைய அறிவினை இயல்பாகப் பெற்றுச் சிறப்பினை அடைந்தன. உமையோ முழுமுதற்பொருளின் உண்மையினையுணர்ந்து தனது தவற்றினைத் திருத்திக் கொள்ளலானுள்.

இதனையடுத்து நாம் பதியினது சிறந்த தொழிலாகிய ஐவகைச் சங்காரத்தினையும் அறிய முற்படவேண்டும். இச்சங்காரங்களை ஞானநூல்கள் மிக விரிவாகக்கூறும்.

சிவபெருமான் என்றும் நின்மலராகப் போற்றப் பெறுபவர். ஆன்மாக்களோ என்றும் மலங்களால் நிரம்பப்பட்டன. ஆன்மாக்களது மலத்தைச் சிவம் தனது சத்தியால் இயல்பாகப் போக்கி, ஆன்மாக் களுக்குச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வை முடிவில் அளிக்கவல்லது.

இனி, இருவகையுலகின் நிலையை இன்னதென உணர்வாம். உலகம் சுத்த உலகம் என்றும், அசுத்த உலகம் என்றும் இருவகைப்படும். இவ்விருவகை உலகங்களையும் இறைவன் அருட்சத்தியின் துணை கொண்டு நல்வழிப்படுத்துகிறான்.

அன்றியும் சிவன் ஆன்மாக்களின் பரிபக்குவ நிலையினை உணர்ந்து, அவர்களின் மனோநிலைக்கேற்ப, முன்னமே அவ்வான்மாக்களைப் பற்றிநிற்கும் அசத் தாகிய மலத்தினைப் போக்குவான். மலநீக்கம்பெற்ற வுடன் ஆன்மா முடிவில் சிவமாந்தன்மைப் பெருவாழ் வடையும். இறைவனே தனது ஐவகைச் சங்காரங் களையும் முறையாகச் செய்து முடிப்பான்.

ஆன்மாக்களிடம் இயல்பாகக் குடிகொண்டுள்ள ஐந்து கலைகள், மூன்று மண்டலம், ஆறு ஆதாரம், ஐந்துபூதம், முப்பத்தாறுதத்துவம், ஐந்து அவத்தை, ஐந்து மலம், ஐந்து எழுத்து, ஆறு அத்துவா ஆகிய இவைகளை முடிவில் இல்லாது ஒடுக்குவான். முடிவில் இவைகளையெல்லாம் முறைப்படி தானேபடைத்து, காத்து, அருள்செய்கின்ற பரமபதியாகவும், தான் ஒருவனே விளங்குவான் என்பதாம்.

அன்றியும் இறைவன் ஒன்பதுவகையான பேதங் களும் தான் ஒருவனேயாகி, தனித்த ஒரு பொருளு மாகி நின்று அருள்செய்வான். இந்நிலையிலேதான்

இறைவனின் தனித்த நடனம் சர்வசங்காரச் சுடலை யில் நிகழ்வுறும்.

சர்வசங்காரச் சுடலையில் தனிநடனம் செய்யும் இறைவன் தானே தனிமுதல்வன் என்பதை உலகினர் உணரத் திருமால் பிரமன் முதலிய தேவர்களின் தலை எலும்பு இவைகளை அணிகலன்களாக அணிந்தும், ஏனைய ஆன்மாக்கள் முடிவுபெற்று வெந்த சாம்பரைப் பூதியாக உடலில் பூசியும் மகிழ்வான். அவ்விறைவனின் அப்பொழுதைய மகிழ்வே மேலே கூறியுள்ள மூவகைத் தொழிலினையும், தாமே செய்து முடிக்கும் வன்மையினைப்பெறும் என்பதாம்.

ஆகவே இம்முத்தொழிலினைச் செய்ய வேறொரு தேவர் வேண்டா என்பதாம். அன்றியும் மலபரிபாக மடைந்த ஆன்மாக்களுக்கெல்லாம் அவ்விறைவன், தனது திருவருள்நோக்கால், சாலோகாதி பதமுத்தி களை அருள்செய்வான்; அல்லாமலும் முடிவில் சிவா னந்தப் பேற்றையும் அருள்செய்யும் பரமபதியாகவும் விளங்குவான்.

இத்தகைய சிறப்புக்களையெல்லாம் இயல்பாகப் பெற்றவர் சிவபெருமான் ஆவர். அவர் தனக்கென இயல்பாக ஒரு உருவமற்றவர். மூவகை ஆன்மாக் களின் வடிவத்தையே தனக்குரிய வடிவமாகக் கொள் பவர் என்றும் சிலர் கூறுவர். முன்னரே கூறியவாறு சிவம் மலமற்றது, ஆன்மா மலமுடையது. ஆகலின் அது சிறிதும் பொருந்தாது.

ஆகவே முதல் அதிகாரத்துள் கூறியவாறு சிவம், ஆன்மா, மலம் என்னும் மூன்று பொருள்களுமே, என்றும் நிலைத்து உள்ளன என்று வேதாகமங்கள் கூறுவதைக்கொண்டு ஆன்மா மலநீக்கம் பெற்ற

பின்னரே சிவமாந்தன்மையினை அடையும் என்னும் உண்மைநிலையினை முடிவாக உணரலாம்.

மூவகை ஆன்மாக்களுக்கும் இறைவன் அவரவர் நிலையில் நின்று என்றும் அருள்செய்வார் என்பது வேதாகமங்களின் உட்கிடக்கை. அவைகளுள் ஆலயங்களே ஆன்மாக்கள் தான் மேற்கொண்டு செய்யும் தவத்திற்குரிய இடமாகும். தவத்திற்சிறந்த தன்மையாகச் சிவலிங்கத் திருவுருவம் அமைந்துள்ளது. அதன்மேல் இறைவனின் அருவநிலை, உருவநிலை இவைகள் பேசப்படுகின்றன. இவைகளால் இறைவனின் மூவகைப்பட்ட பதநிலை இன்னதென்று விளங்கிக் கொள்ளலாம். ஆகவே சிவம் திருவருளாகிய சத்தி ஒன்றனையே தனக்கு உரிமையாக என்றும் உடையவர் என்ற முடிவிற்கும் வரலாம்.

சிவம் சத்து, சித்து, ஆனந்தம், வாக்கு, மனோதீதம் என்னும் ஐவகை நிலையினையேற்கும். அன்றியும் அருட்சத்தியின் துணையினல் ஐவகைத் தொழிலினையும் செய்து முடிக்கும்.

முடிவாக, சதாசிவரூபம் என்னும் நூல்முறை கூறுகின்றவாறு இறைவனை ஆன்மா உள்ளவாறு உணரவேண்டும். இறைவன் முடிவாகத் தன்னுருவத்தைத் தனக்கேயாக்கி விளங்கிக்கொண்டிருக்கின்றார். இந்தமுடிபே சித்தாந்தநூல்களின் ஒத்த பதியியல் முடிபாகும். இப்பதியின் முடிபுகளை ஆன்மாக்கள் தங்களது ஞான உணர்வால் அறிந்து என்றும் உய்திபெறுமாக.

# 3. பசுவியல்

சிவம் எவ்வாறு பழமையும் பெருமையும் உடையதோ, அவ்வாறே ஆன்மாவும் பழமையும் பெருமையும் இயல்பாக உடையதாம். இறைவனை ஞானநூல்கள் சூக்குமசித்து என்றும், ஆன்மாக்களைத் தூலசித்து என்றும் கூறும். சித்து என்னும் சொல்லுக்குப் பொருள் ஞானம் என்பதாம். சூக்குமம் என்பது சிறிய பொருளினைப் பெரிய பொருளாகக் காட்டுவது. தூலசித்து என்பது அண்டங்கள் முதலாகிய பெரிய பொருள்களைச் சிறியதாக்கிக் காட்டுவது.

ஆன்மா இயல்பாகவே என்றும் ஞானமுடையது. ஞானமானது நிலைபெற்றுள்ள இடத்தில் இச்சை, கிரியை ஆகிய இவ்விரண்டு பொருள்களும் நிலைத்து நிற்கும். ஆன்மஞானம், என்றும் சித்து ஆகும் பொதுத்தன்மையுடையது. ஆன்மா இயல்பாயுள்ள இச்சை கிரியைகளால் மலத்தினை அவாவித் தனதாக்கிக் கொள்ளும். ஆன்மா இயல்பாக என்றும் மலநீக்கத்தினையே விழையும்.

மேலும் ஆன்மா தனது அறிவை விளங்குமாறு செய்யும் சிவத்தை என்றும் சார்ந்தே வாழும். சார்ந்ததன் வண்ணமடைவது ஆன்மவியல்பாதலின், ஆன்மா என்றும் சிவத்தின் தன்மையினை அடைய முயலும். சிவம் என்னும் பொருளினைப் பற்றிய இயல்பால், ஆன்மா தன்னைப்பற்றிய கிரியையை என்றும் உடையதாகச் செயல்படுத்தும்.

பின்னர், ஆன்மா நூல்களிற் கூறியுள்ளவாறு சிவம் என்றுமே பரந்த ஞானத்தினை உடையது என்னும் உண்மையினை உணரும். அப்பரந்த ஞானத்தால் ஆன்மாக்களைச் சிவன் என்றும் தன்வசப்படுத்தி ஆள்வான். மலம் என்பது சடப்பொருள். அது தானாக ஆன்மாவைப் பற்றாது. பழமையாக வேறு பொருள் இல்லாமையால், சிவன் தானாகவே ஆன்மாவிடம் மலத்தைச் சேர்ப்பான். அதன்பின்னரே ஆன்மா அம்மலத்தைத் தன்னிடம் இயல்பாக உள்ள பொருளாக எண்ணி அமைதியுற்றிருக்கும். இதுவே சித்தாந்த நூல்களின் உட்கிடக்கையாகும் என்பது ஆன்றோர் முடிபு.

அல்லாமலும் வேதாகமங்கள் முறையாக இறைவனைப் பற்றிக் கூறும்பொழுதெல்லாம் மலநீக்கம் பெற்றவன் என்றே கூறும். ஆன்மாவின் மலத்தை நீக்குவது இறைவனின் வினையாக நூல்கள் கூறுகின்றன.

ஆன்மா என்றும் பிறர் உணர்த்த உணருகின்ற பெற்றியினையுடையது. அவ்வுணர்வும் ஆன்மாவிற்கு வழிமுறைப்படியே உண்டாகும். அம்முறைகளைச் சிவஞானிகள் உணர்ந்து விளக்குவார்கள். ஆதலின் நாம் அவர்கள்வழிநின்று இறைவனை உணரும் பெற்றியினைப் பெறவேண்டும். அதுவே குருவுபதேசவழிப் பெறும் நல்லறிவும் ஆகும். சுயஉணர்வு இல்லாத ஆன்மா என்றுமே மலத்தின்வயப்பட்டு அயர்ந்து கிடக்கும். ஆயினும் கண்ணொளி பகலவன்முன் நல்ல விளக்கத்தினை அடைதல் கண்கூடு. அதேபோன்று இறைவன் திருமுன் ஆன்மாவும் அவனருளால் நல்லுணர்வைப் பெறும். அவ்வுணர்வால் ஆன்மாவின் மலமூலமாகிய சடத்தன்மை நீங்கப்பெறும். ஆகவே

ஆன்மஞானம் மலத்தால் மறைபடாவண்ணம் இறைவனுல் காப்பாற்றப்படும். காப்பாற்றப்பட்ட நிலையில் ஆன்மா முடிவில்லாத ஆனந்தத்தைப் பெறுவதால், அவ்வான்மா என்றுமே பரிசுத்தநிலையுடையதாகவேயிருக்கும்.

இனி முன்னரே கூறியவாறு, ஆன்மா சித்தாந் தன்மையுடையது. சித்து என்பது ஆன்ம அறிவு. கண்ணொளி, சூரிய ஒளி ஆகிய இரண்டும் ஒன்றுபடினும் நுணுகி நோக்குவார்க்கு வேருந்தன்மை புலப்படும். ஆயினும் ஆன்மா அந்தநிலையில் காண்பது பேரொளியாகிய தெளிவுக்காட்சியினையேயாம்.

சிவம், உயிர் ஆகிய இரண்டு பொருள்களும் உணர்தல், உணர்த்துதல் ஆகிய இருவிதத் தொடர்பினையுடையன. இத்தொடர்பானது ஒன்றைவிட்டு ஒன்றுபிரியாமல் அத்துவிதமாய்க் கலந்தே இருக்கும். சூக்குமம் தூலம் ஆகிய இரண்டும் தங்களுக்குரிய குணங்குறிகளில் என்றும் வேறுபடாது. இவ்வாறு ஒன்றுபட்ட அத்துவிதநிலையையே சிவஞானிகள் தம் அனுபவ அறிவினுல் காண்பார்கள்.

ஆன்மா என்றும் சத்துப்பொருளாகிய தூலசித்து என்ற பெயரினைப் பெறும். அந்த நிலையில் ஆன்மா ஒருபொருளினைக் காணும் அறிவாகமட்டும் நிற்கும். ஆன்மாவிற்கு என்றும் ஆதாரமாய் நிற்பது சிவம். சிவம் சூக்குமசித்து என்னும் பெயரினைப் பெறும் என்று முன்னரே கூறப்பட்டுள்ளது.

சூக்கும சித்தாகிய நிலையில் சிவம் காட்டறிவு என்னும் பெயரினைப் பெறும். சிவஞானிகள் காணும் அறிவு, காட்டறிவு ஆகிய இந்த இரண்டினையும் வேருகப்பிரித்து அறியாது ஒன்ருகவே காண்பார்கள்.

தாயானவள் பாலினைக் குழந்தைக்கு ஊட்டுதலும், குழந்தை அந்தப்பாலை உண்ணுதலுமாகிய பயனைப் போன்றது அது.

ஆக, ஆன்மா சிவத்தோடு அத்துவிதமாகக் கலந்து நிற்கும் ஒன்றுபட்ட அடிமைத் தன்மையையும், இறைவனின் ஆளுகைத் தன்மையையும் காணும் சிவயோகநிலையினை முடிவில் அடையும். சிவயோக முதிர்வில் ஆன்மாவும் சிவனும் வேறு என்னும் தன்மை நீங்கி ஒன்று என்னும் தன்மையில் தோன்று வான். அப்போது ஆன்மாவைப் பற்றியுள்ள மலம் இயல்பாகவே அதனைவிட்டு நீங்கும். அதன் முடிவில் ஆன்மாவிடம், 'அதுநான்' என்னும் வேதாந்த வாக்கியமும், 'நீ அது ஆனாய்' என்னும் சித்தாந்தவாக்கியமும் வேறுபடாமல் ஒன்றுபட்டதாகவே காட்சியளிக்கும். ஆகவே தூலமாகிய ஆன்மாவும், சூக்கும மாகிய சிவனும் வேறின்றி ஒன்றாகவே ஆகிச் சுத்த மாந்தன்மையினை அடையப்பெறும்.

இனி, ஆன்மா அழிவில்லாத பெரும்பொருளான தன்மையை ஒருவாறு ஆய்வாம். ஆன்மா என்றும் அழிவில்லாத பொருளாக இருந்தாலும், தனக்குப் பேருபகாரமாக இருந்த சிவபரம்பொருளைப் பழவினையால் மறக்கும். மறந்தநிலையில் மலத்தைப் பற்றிய குற்றம் ஆன்மாவை அடையும். அந்நிலையில் ஆன்மாவிடம் கன்மம் முதலாய மலங்கள் தோன்றும். கன்மம் பிராரத்தமாக மாறி, மேலும் சிவத்தினை மறக்கும் ஆகாமியமாக வளரும். அதன்மேல் ஆன்மாவைச் சஞ்சிதவினைகள் பற்றும். அதன்மேல் இருவினைகளை ஆன்மாக்கள் அடைந்து வாழும்.

பின்னர், ஆன்மா தெரிந்தும் தெரியாதும்செய்த புண்ணியமுதிர்வால், சிவத்தினிடம் மாறாத அன்பு

கொண்ட நிலையில் இறைவனது திருவருள் ஆன்மா விடம் நீங்காது நிலைபெறும். ஆகாமியவினையும் இறைவன் சேர்க்கையால் ஆன்மாவை விட்டகலும். சஞ்சிதவினை ஆன்ம அனுபவத்தாற்றொலையும். அதன் மேல் ஆன்மா மலபரிபாகம் அடையும். பின்னர் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய மார்க் கங்கள் தவமிகுதியால் ஆன்மாவை அடையும். ஞான முதிர்வில் மலம்நீங்கி முனைப்பற்று ஆன்மா சிவத்துள் அடங்கி அழியா இன்பத்தை அடையும். இந்நிலை யினையெல்லாம் ஆன்ம அனுபவம் கைவரப்பெற்ற சிவஞானிகள் நன்குணர்வார்கள். ஆதலின் நாம் என்றும் அவர்கள்வழியே நின்று அறிந்துகொள்ள முயலுதலே அறிவுடைமையாம்.

# 4. மலவியல்

முன்பு கூறிய பொருள்கள் மூன்றனுள் மலமும் ஒன்று. மலமானது விறகில் தீயும், பாலுள் நெய்யும் வெளிப்படாது மறைந்திருப்பதுபோல், உயிரினுள் இயல்பாக உள்ள ஞானம் கிரியை இவற்றைத் தன்னுள் அடக்கி மறைத்து, அப்பொருளை வேருக உணர வையாது, தாளுகவே முனைப்புற்று நிற்கும்: மலம் தன்னுருவநிலையில் முன்னர் ஆன்மாவின் அறிவை மறைக்கும்; பின்னர் அறிவை விளக்கும் சக்தியை மறைக்கும். இம்மலத்தையே ஞானநூல்கள் அசத்து என்றும், மூலமலம் என்றும் கூறும்.

மேலும் சிவம் சத்துப்பொருள். பாசமோ அசத்துப் பொருள். ஆன்மா இவ்விரண்டனையும் சார்ந்து அதன் வண்ணமாய் நிற்கும். அந்நிலையில் ஆன்மா சதசத்து என்று கூறப்படும். மலமோ சதசத்தாகிய உயிரின் ஞானம், கிரியை இவற்றின் அருஞ்செயல்களைக் குறைத்து அணுவாக ஆக்கும். அப்பொழுது அது ஆணவம் என்னும் பெயரினைப் பெறும். இது போன்ற பலபெயர்கள் மலத்திற்கியல்பாக உள்ளன. மலத்திற்கு இயல்பாக அருவமோ, உருவமோ இல்லை. இவ்விரண்டும் அற்றநிலையில் மலத்தினைப் பசு, பாச ஞானங்களால் அளவிட்டறிய முடியாது.

உயிர், அறிவு அறியாமை என்னும் இரண்டு குணங்களை இயல்பாகப் பற்றியிருக்கும். அக்குணங்களால் உயிர் அடையும் பயன் நல்வினை, தீவினை

என்பனவாம். நல்வினை தீவினை இவற்றின் பயன் இன்பத் துன்பங்களாம். இந்நிலையில் ஆன்மா அடைவது சுவர்க்க நரகங்களாம். அச்சுவர்க்க நரகத்தை அடைவதற்குரிய வழி இறத்தல் பிறத்தல்களாம். இவ்வாறே ஆன்மாக்கள் புண்ணியபலத்தால் அதனதன் பலனை அடைந்தே தீரும்.

மேலும் மலத்தை உள்ளவாறு உணர்ந்தவர்கள் சிவஞானிகளேயாவர். அவர்கள் என்றும் தாம் சிவமாந்தன்மை அடைவதையே விரும்புவர். ஆயின் மலமோ ஆன்மாவை அநாதியே பற்றி வருத்தும். அவற்ருேடு எண்ணிக்கையற்ற பிறவியைக் கொடுத்து அந்தப் பிறவிதோறும் துயரத்தையும் கொடுக்கும். இவைகளை நூலறிவுடையோர் நன்குணர்வர்.

மலம், என்றும் எல்லா உலகங்களிலும் உள்ள உயிரினை அடக்கி ஆளும் வலிமையுடையது. அந்த நிலையில் மலத்தினை ஒரு கொடுங்கோலரசனுக்கு ஒப்பிட்டுக் கூறலாம். இக்கொடுமையினை உணர்பவர் சிவபெருமானேயாவர். அப்பெருமான் தன் சத்தியால் மலத்தின் கொடுமையைக் குறைப்பர். குறைவுபட்ட நிலையிலே ஆன்மா ஞானத்தை அடையும். ஞானத்தை அடைந்த நிலையில் ஆன்மா சிவமாந்தன்மை அடையும். இந்நிலையினைத் தத்துவஞான அறிவுள்ள ஆன்ருேரே நன்குணர்வர். இந்நிலையில் இறைவன் ஆன்மாவின் மலநோயைப் போக்கும் வயித்தியனுக முன்னின்று அருள்புரிகின்ருன்.

## கன்ம இயல்பு:

உயிர் என்றும் மறக்கும் இயல்பினையுடையது. என்று அவ்வுயிர் இறைவனை மறந்ததோ, அன்றே

மலம் பற்றும். அவ்வாறு பற்றிய மலம், கன்மம் என்னும் பெயரினைப் பெறும். இக்கன்மமலம் இருவினைக்கும் காரணமாகி, மனவாக்குக் காயங்களைச் செயல்படச்செய்யும். வித்து நிலத்தோடு ஒன்றினும் தண்ணீராகிய குளிர்ச்சி அவ்வித்து முளைப்பதற்கு வேண்டும். அதுபோன்று தனு கரண புவன போகங்கள் இயல்பாக இருப்பினும் சிவசத்தியின் துணை ஆன்மாவிற்கு என்றும் வேண்டும். அப்பொழுது ஆகாமிய கன்மமலமாகிய இருவினைகளும் தானே அகலும்.

ஆகவே மூலகன்மமலம் உலகுக்கெல்லாம் துணைக் காரணமாகவே விளங்கும். ஆயினும் இம்மலம் ஆன்மாவினுல் தேடிக்கொள்ளப்பட்டது. குற்றமுடையது. அதன் இயல்பு அறிந்து உணரக்கூடியது.

ஆன்மாவினை இயல்பாகவே பற்றுவது மலமாகிய நோய். அம்மலமாகிய நோயைப் போக்கும் வயித்தியராக என்றும் இறைவர் உள்ளார். அம்மலநோய் நீக்கமுடிவில், ஆன்மா இறைவனுடைய திருவடி தீட்சையைப் பெற்று வாழும். இறைவனது திருவடி தீட்சையினுல் ஆன்மாவைப்பற்றிய சஞ்சித வினைகள் யாவும் இயல்பாகவே நீங்கும். ஆயினும் முன்னைப் பழக்க வாசனையால் ஆன்மா மீட்டும் மலத்தினைப் பற்றும். இறைவன் அவ்வாறு மலத்தின் வயப்பட்ட ஆன்மாவைத் தான் வேறு, ஆன்மா வேறு என்று பிரிக்காது ஒன்ருகவே ஆக்கி, காணுதல் காட்டுதல் ஆகிய இந்தச் செயல்களால் சிவானுபவத்தில் ஆழச் செய்வான்.

எனவே ஆன்மாவைப்பற்றிய மூலகன்மம் என்பது என்றும் சிவனை நினையாது கழிதலேயாம். மேலும் ஆன்மா இருவினைப் பயன்களை அனுபவித்தற்கும்,

அது காரணமாகப் பலவகைப் பிறவிகளை அடைதற்கும் மூலகன்மமே காரணமாகும். இம்மலத்தை நல்லறிவின் துணைகொண்டுதான் ஆன்மா தன்னிடமில்லாது அகற்றி வாழ்தலைச்செய்யும். மேலும் உலக இயக்கங்கள் யாவும் திருவருளின் செயலே எனவும் காணவேண்டும். அவ்வாறு காண்பதே எல்லாவற்றையும் சிவமாகக் காணும் பெருவாழ்வினைத் தரும்.

அந்தநிலையிலே ஆன்மா இடைவிடாமல் இறைவனையே சிந்தித்துக்கொண்டு இருக்கும். அவ்விடைவிடாச் சிவசிந்தனையே ஆகாமியம் முதலாய கன்மங்களை நீக்கும். கன்மம் நீங்கியநிலையில் ஆன்மாவிடம் இருவினையொப்பு உண்டாகும். இருவினையொப்பு உண்டான நிலையில் அறியாமைநீங்கி நல்லறிவு ஆன்மாவைப் பற்றும். இதற்குரிய வழி ஆன்மா சித்த சுத்தி அடைவதேயாம். மனத்தூய்மை அடைவது என்பது வேதங்கள், சிவாகமங்கள் ஆகிய ஞானநூல் அறிவுகளைப் பெறுவதனாலேயாம் என்பது ஆன்றோர்களது ஒருமித்த முடிபாகும்.

**மாமாயை :**

இதுவும் மேலனபோன்று சடப்பொருளே. ஆயினும் சிவபெருமானது பெருங்கருணையாகிய சிற்சத்தியிற் பிரிந்து, மூலகாரணமாய் உள்ளது. மேலும் ஓம் என்னும் பிரணவமாயும், சூட்சும பஞ்சாட்சரமாகவும் விளங்குவது. ஆன்மா சிவச்சார்பு உடையதென முன்னர் அறிந்தோம். ஆயினும் மல மறைப்பு என்பது ஆன்மாவிடம் அநாதியேயுடையது. அம்மறைப்பு ஆன்மாவிடம். ஞானமோ கிரியையோ தோன்றாமல் மறைக்கும். அம்மறைப்பினை முற்றறிவுடைய இறைவனாலேயே போக்கமுடியும். ஆகவே மாமாயையும்

அழிபொருளேயாகும் என்பது சித்தாந்த முடிபு. இவ்வழிபொருளும் இறைவன் திருவருள் குறிப்பினுலேயே ஆன்மாவை அடையாது கழியும் என்பதாம்.

அசுத்தமாயை :

அழிவில்லாத முப்பொருள்கள் இவையென்று முன்னரே உணர்ந்துள்ளோம். சிவம், மலம், ஆன்மா என்னும் மூன்று பொருள்களுள், மலம் ஆன்மா என்னும் இரண்டும் தோன்றி அழிவது என்பதை முன்னரே அறிந்துள்ளோம். காரணம் சிவம் என்னும் செம்பொருளால் ஆக்கப்படுவதினுலேயாம்.

சிவன் என்றும் தன்னைச் சார்ந்த சீவர்களின் மலத்தினைப்போக்க அருள்செய்பவர். மலம் கழிந்த நிலையில் ஆன்மாவை ஞானம் தானுகவே பற்றும். இவ்விருகடமையினையும் இறைவன் இயல்பாகவே ஏற்று அருள்செய்வர். ஆன்மாவோ என்றும் சுதந்திர ஞானம் இல்லாதது; மலத்தால் சூழப்பட்டுக் கிடப்பது; அதுகாரணமாகச் சிவத்தை மறக்கும் இயல்புடையது. அந்நிலையில் மும்மலங்களும் ஆன்மாவை இயல்பாகப்பற்றும். ஆன்மா என்றும் இயல்பாகவே மூடத்தில் ஆழ்ந்துகிடப்பது. அதன் அறிவை விளக்கவே மாயை என்னும் பெயரோடு மலம் விளங்கிக் கொண்டிருக்கின்றது. மேலும் ஆன்மாவிற்குத் தனு, கரண, புவன, போகங்களை அளித்துத் தத்துவங்களை உணரச் செய்கின்றது. இவையும் தோன்றி நின்று அழியுந்தன்மையதே. இவைகளையே ஞான நூல்கள் சிவம், ஆன்மா, மலம் என்றும், பதி, பசு, பாசம் என்றும் எடுத்துப் பேசுகின்றன. இருப்பினும் இறைவன் ஒருவனே மூலகாரணமாக நின்று ஆன்மாவை நல்வழிப்படுத்துவான் என்பதாம்.

இனி மலகன்மங்களோடுகூடிய அசுத்தமாயையை இன்னதென நாம் உணர முயல்வாம். அசுத்தமாயை யாவது பொருள் மூன்றனுள் ஒன்ருகிய மலத்தின் காரியமே. இவைகளெல்லாம் இயல்பாகவே மூடத் திலழுந்திய ஆன்மாவினுல் உணர இயலாது.

இனி இதற்கு ஆன்ருேர் கூறிய ஒரு உவமையைக் கூறுவாம். ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும், உமி, முளை, தவிடு ஆகிய மூன்றனுக்கும் ஒப்பிட்டுள்ளனர். இவற்றைமுறையே ஆணவத்திற்கு உமியையும், கன்மத்துக்கு முளையை யும், மாயைக்குத் தவிட்டையும் உவமையாகக் கூற லாம். இந்த உண்மைகள் யாவும் பசுஞான, பாச ஞானங்கள்பற்றி உழல்பவரால் காணக்கூடாதாம். ஆகவே உமியோடு கூடிய நெல்லே முளைக்கப்பெறும் என்னும் உண்மை அறிவுடையோர்க்கே புலப்படும். இதிலிருந்து சிவஞானத்தின் உண்மைப்பொருள் இன்னதென்பதை ஒருவாறு ஊகித்துணரலாம்.

மாயை நீங்கி ஆன்மா சிவஞானத்தைப் பெறு வதற்குச் சில வழிமுறைகளை முன்னோர்கள் வகுத்து உள்ளனர். அவைகளுள் ஒன்றே ஆலயங்களுள் முறை யாக நடைபெறும் திருவிழாவாகும்.

இனி, அவற்றின் தத்துவத்தை நோக்குவாம். முப்பொருளின் உண்மையை விளக்குவதே முதல் நாளாகிய கொடியேற்றுதலாகும். இருவினையொப் பின் நீக்கமே இரண்டாவது திருநாளாகும். முக்குண அழிவைக் குறிப்பிடுவதே மூன்ருவதுநாள் விழா வாகும். நான்காம்நாள்விழா அந்தக்கரணஅழிவினைக் காட்டும். ஐம்புலன்கள்வழி வரும் ஐந்து இந்திரிய அழிவினை ஐந்தாம்நாள்விழா நினைவுறுத்தும். காமம்

முதலாய ஆறுபகைகளின் அழிவே ஆறும்நாள் விழா. அணிமா முதலாய சித்திகளை அளிக்கும் மந்திர அழிவே ஏழாம்நாள் விழா. ஆன்மாவைப் பற்றிய ஆணவ அழிவை எட்டாம்நாள்விழா அறிவுறுத்தும். திரோதாயி முதலாய மலமறைப்பின் அழிவே ஒன்ப தாம்நாள் விழாவாகும். முடிவில் பேரின்பநிலையே பத்தாம்நாள் விழாவாகும். இவ்வுண்மைகளையெல் லாம், அசுத்தமாயையின் தன்மையுணர்ந்து அதனை அழித்தவரே உணர்வர்.

இவ்வாறு ஆன்மாவைப் பற்றிய அசுத்தமாயை அழிந்தால் ஆன்மா ஞானநூலின் வழிமுறைப்படி யாவும் அடைந்தேதிரும். ஆகவே இறைவன் என்றும் நித்தியமான பொருளாவான். ஏனைய மாயை முத லான பொருள்களையெல்லாம் அழியும்பொருளாகவே கொள்ளவேண்டும் என்பதாம்.

# 5. முத்தியியல்

இறைவன் என்றும் சூரியனும் அதன் ஒளியும் போல ஒன்றுபட்டும், இரண்டாகிய நிலையிலும் காட்சிகொடுப்பான். அன்றியும் சிவனருட்சத்தி சிவ ஞானமாகக் காட்சி தந்தருளும். சிவஞானம் என்றும் சிவத்தொடு கலந்து ஒன்ருய் நிலைபெற்றிருக்கும். இந்நிலையில் பெருமான் அணுசதாசிவர் முதலிய பதின்மருக்கும் சிவனருட்பேதத்தையும், உருத்திர பேதத்தையும் உபதேசித்தவைகளே இருபத்தெட்டு ஆகமங்களாம். அவைகளே சித்தாந்தம் எனப்படும். அச்சித்தாந்தமே குருபரம்பரையாக நம்மவருக்கு உபதேசிக்கப்பட்டுவருகிறது. அன்றியும் சிவஞான மாகிய சத்தியே பலவித வேறு வடிவங்களாகக் காட்சி கொடுப்பதாகவே ஞானநூல்கள் விரிவாகக் கூறுகின்றன. ஆன்மாக்களைப் பழமையே பற்றி நிற் பது மலங்களாம். அம்மலப்பற்றினைக் கடலினுக்கு ஒப்பாகக்கூறுவர் முன்னேர். அம்மலமாகிய கடலி னின்றும் ஆன்மாவைக் கரையேற்றிச் சிவஞானத்தை அனுபவிக்கச் செய்பவன் இறைவன் ஒருவனேயாவன். இறைவன்திருவடியை அடைந்து மலநீக்கம் பெற்ற ஆன்மா, இறைவனை அடையும் படிமுறையை முறை யாக உணரும். உணர்ந்தால் ஆன்மா சிவஞானம் கைவரப்பெற்று மேலான முத்தியையும் முடிவில் அடையும்.

இனி, ஆன்மா பரமுத்தியடையும் தன்மையை ஒருசிறிது ஆராய்வாம். ஆன்மா இயல்பாக முற்றறிவு

உடைய பொருளாகாது. ஞானம், கிரியை ஆகிய இவைகளைத் தனக்கென இயல்பாயுடையது. அதனால் ஆன்மாவானது அறிதல் அசைதலைப்பெறும். அவ்வறிதல், அசைதலால் மலத்தையறிந்து பற்றி அசத்தாகக் கிடக்கும். பின் தனது சூட்சும அறிவால் சிவத்தை அறிந்து பற்றிச் சத்தாந்தன்மை பெறும். சத்தாந்தன்மை பெற்றவுடன் ஆன்மாவைப் பற்றிய அசத்து தானகவே நீங்கும். அசத்து நீங்கியவுடன் ஆன்மா சத்தினுளடங்கும். அவ்வாறு அடங்கிய நிலையிலே பாசநீக்கம் பெற்று முத்திப்பேற்றினை அடையும். அந்தநிலையில் ஆன்மா சிவமும் தானும் வேருந்தன்மை அற்று ஒன்ருந்தன்மை பெறும். அதுவே ஆன்மாவிற்கு நித்தியானந்த நிலையாகும்.

ஆன்மா முடிவில்லாத அந்த ஆனந்தத்தைப் பெறும்பொருட்டு முன்னரே தமது பெருங்கருணையினல் இறைவன் வேதங்கள், ஆகமங்கள் ஆகிய சாத்திர நூல்களை அருளிச்செய்துள்ளார். அவைகளை நம் பசுபோத ஞானத்தால் அளவிட்டறிய முடியாது. ஆயினும் நல்லாசிரியரையடுத்து அவர்பால் அருளுபதேசம் பெறுவதால் ஒருவாறு உணரலாம். நல்ல ஆசிரியரோ ஐந்திலக்கணமும், தருக்கம் முதலிய நூற் பயிற்சியும், பல சாஸ்திரப் பயிற்சியும், இலக்கியப் பயிற்சியும் இயல்பாகப் பெற்றவராவார். இவைகள் எல்லாம் தக்ககுருவினை அண்டி அவர்பால் பொறுமையொடு இருந்து கற்றவர்க்கே கைகூடுவனவாகும். அத்தகைய நல்லாசிரியரை அண்டிக் குரு சீடர் என்ற முறையில் நூலறிவினைப் பெறவேண்டும்.

பின்னர் ஞானகுருவை நாடி நல்லறிவு பெற விழையவேண்டும். ஞானகுருவினிடத்து அணுக்கத் தொண்டனயிருந்து அருளுபதேசம் பெறவேண்டும்.

ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தல், கேட்டல், சிந்தித்தல் ஆகிய இம் முறைகளால் ஞானம் உண்டாகும். அதன்மேல் ஆன்மாவிடம் சிவஞான முளை தானே தோன்றும். சிவஞான முளை தோன்றியவுடன் ஆன்மாவிடம் சிவனடியாரை அடையவேண்டும் என்ற ஞான உணர்வு தோன்றும். சிவனடியாரோடு கூடிய உணர்வால் சிவாலயத்திற்குத் தொண்டு செய்தல், சிவசின்னம் அணிதல், சிவலிங்கத்தைத் தரிசித்தல், சிவன்கோயில் திருப்பணிசெய்தல், சிவசம்பந்தமான நூல்களைப் பாராயணஞ்செய்தல், பிறர் பாராயணஞ் செய்யும்போது கேட்டல் ஆகியவைகள் உண்டாகும். இந்த உணர்வால் ஆன்மாவைப்பற்றிய மலத்தின் வலிமை கெட்டொழியும்.

ஆன்மா அதன்பின் இறைவனைக் கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் எண்வகை மலர்களால் அருச்சனைசெய்து வழிபடும் நிலைமையினையடையும். பின்னர் பஞ்சாட்சர தியானம் கைவரப்பெறும். வரப்பெற்ற நிலையில் ஆன்மா சிவதரிசனம் கைவரப்பெற்று முத்திநிலையை அடையும். இக்கருத்தினையே சிவஞானபோதப் பன்னிரண்டாம் சூத்திரம் வலியுறுத்தும்.

மேலேகூறிய இந்தநிலை முற்றக் கைவரப்பெற்றவர்களே சமயகுரவர்களும், சந்தானுசாரியர்களும், சிவனடியார்களும் ஆவார்கள். திருஞானசம்பந்தர் ஒன்றுபடக் கலந்த வரலாறு இங்கு உணரத்தக்கது. சிவஞானத்தின் முடிந்த பயனுகிய முத்திநிலையை சிவஞானிகளே உணர்வர். உணர்ந்தவர் தாமே அறிந்து அனுபவிப்பர். அவ்வனுபவ நிலையை அவர் தமது மனத்தினுல் மதித்து, வாக்கினுல் சொல்ல

இயலாது. இதனை, ''கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்'' என்னும் பழந்தொடர் வலியுறுத்தும்.

மேலும் சிவபரம்பொருள், அவரவரது பிறவி நிலைக்கேற்பவே மேலாம் அறிவைக் கொடுப்பார். அவரவர் அறிவினளவே முத்திநிலையென்று கூறத் தொடங்குவர். அவைகளெல்லாம் சிவஞானமற்றோர் கூற்று எனத் தள்ளுவதைத் தவிர நம்மனோர்க்கு வேறு வழியில்லை.

ஆகவே இறைவன், இரும்பினைக் காந்தம் தன் வசமாக்குவதுபோல் உயிரினைத் தன் வசப்படுத்து வான்; வசப்படுத்திய நிலையிலும் விகாரமடையமாட் டான். மேலும் நெருப்பு இரும்பைக் கெடுக்காது நிலைத்து நிற்றல்போல் இறைவனும் உயிரைக் கெடுக் காது மலத்தையே கெடுப்பான். அன்றியும் நீரில் கரைந்த உப்பு நீராந்தன்மை அடைதல்போல், உயி ரோடுசேர்ந்த இறைவனும் உயிராந்தன்மையடைந்து நிற்பன். ஆகவே உயிர் சிவானுபவம் ஒன்றனையே அடைந்து நிற்கும் என்பதில் பிழையேதுமில்லை.

எனவே சிவாகமங்களும், சித்தாந்தநூல்களும் முடிவாகச் சொல்லுகின்ற பொருள் ஒன்றேயாம். அஃதாவது உயிர் சிவஞானம் பெற்றுச் சிவனடியை அடைதலேயாம். அக்காலை ஆணவமலம் கழிய, உயிர் மலத்தினின்றும் நீங்கித் தனித்துநிற்கும். அந்நிலையே முத்தி எனப்படும். உயிரினது இயல்பு என்றும் தனித்து நில்லாது. ஆதலின் சிவத்தைச் சார்ந்து நிற்கும். சிவத்தைச் சார்ந்த நிலையில் உயிர் சிவ மாகவே கருதப்பெறும். இறைவனும் தனது எண் வகைக் குணங்களையும் ஆன்மாவிற்கு விளக்கிக் காட்டுவர்.

முடிவாக ஆன்மாக்களாகிய நாம் அனேவோரும் பழமையாகவே பற்றிய மலமூட்டத்தில் அழுந்தியுள்ளோம்; நித்திய ஆனந்தமாய சிவஞானத்தை மறந்தொழிந்தோம்; அதனுல் கன்மம் பற்ற பிறவியாகிய கடலுள் சிக்கி உழலுகின்ருேம்.

பிறவியாகிய கடலேக்கடந்து கரையேற விரும்புவது இயற்கை. இந்தப் பிறவியிலேயே சிவஞானம் கைவரத்தக்க உபாயங்களே நாடவேண்டும். அந்த உபாயங்கள் நாம் நம்முடைய குரு உபதேசப்படி நித்திய கன்மங்களே வழுவாது குறைவறச் செய்து வருவதேயாம். அவ்வாறு நித்திய கன்மங்களே நெறி வழுவாது செய்து வருவோமாயின் ஆன்மகோடிகளாகிய நமக்குச் சிவஞானமும் சிவனருளும் கிடைக்கும். அவனருளால் முடிவில் முத்தியுங் கைகூடும். உலகமும் நன்னெறியினே அடைந்து நலம் பலபெறும்.

திருச்சிற்றம்பலம்.

உ

## ஸ்ரீ மெய்கண்டதேவநாயனுர் துதி.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய்மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவநாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

— ஸ்ரீ அருணந்திசிவாசாரியார்.

# சிவஞானபோதம்

மங்கலவாழ்த்து

கல்லால் நிழல்மலை, வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர், நல்லார் புனைவரே.

இதன்பொருள்: அருள்வடிவாகிய கல்லானிழலின் கண்ணே எழுந்தருளியிருந்து, நந்தி பெருமானுக்கு இந்நூலான் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர், மேன்மேற் கருணைகூர்ந்தருளுதற்பொருட்டு, பொல்லாத பிள்ளையாருடைய ஞானசத்தி கிரியாசத்தி யென்னும் இரண்டு திருவடித்தாமரைகளை, கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர், தம்முடைய ஞானசத்தி கிரியாசத்திகட்கு வியாபகமாகக்கொண்டு தாடலைபோல் அடங்கி நிற்பர் என்றவாறு.

## க. பொது அதிகாரம்

### 1. பிரமாணவியல்

முதற்சூத்திரம்

அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்(து)உள தாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

என்பது சூத்திரம். என்னுதலிற்றோ எனின், சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இது சூத்திரக்கருத்து உரைக்கின்றது.

இ-ள்: நிவிர்த்திகலை முதலிய பஞ்ச கலைகளுட் பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக்கண்ணதாகிய மாசங்காரத்தைச் செய்யும் வினைமுதலாயுள்ள முதல் வனையே தனக்கு முதற்கடவுளாக உடைத்து அவன் அவள் அது என்று இவ்வாறு சுட்டியுணரப்படுவதாய உலகம் என வேதாகமங்களுட் கூறப்படுவதனை அநு மான அளவையால் உணர்த்துதலைக் கருதிற்று இச் சூத்திரம் என்றவாறு.

சூர்ணிக்கொத்து:

1 சகம் பிறப்பு இருப்பு இறப்பு ஆகிய முத் தொழிலையுடையது.
2 அது அரனாலே உடையது.
3 மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள்.

இரண்டாஞ்சூத்திரம்

அவையே தானே ஆய்இரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

எ-து. சூ-ம். எ-னின், புனருற்பவம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உலகம் ஒடுங்கியினின்றும் மீள உள தாமாற்றை வகுத்து உணர்த்துமுகத்தானே துணைக் காரணம் முதலியன இல்வழி இறைவன் உலகிற்கு நிமித்தகாரணனாதல் சாலுமாறு யாங்ஙனம் என்னும் கடாவை ஆசங்கித்து அவற்றது உண்மைக்குப் பிர மாணம் உணர்த்துதல் நுதலிற்று இச்சூத்திரம் என்றவாறு.

சூர்ணிக்கொத்து :

1 அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.
2 உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.
3 உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்.
4 அரன் சருவ வியாபகன்.

மூன்றுஞ்சூத்திரம்

உளதில(து) என்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

எ-து. சூ-ம். எ-னின், ஆன்மப்பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல் அவையேதானே என்று எடுத்துக் கொள்ளப்பட்ட உயிர் சூனியம் முதலியவற்றுள் ஒன்றுகற்பாற்றென அவ்வமதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்து உயிர் அவற்றிற்கு வேருய் உண்டென்பது கருதலளவையான் விளக்கி மேலைச் சூத்திரத்தின் உயிர்கள்மேல் வைத்தோதிய முதல்வனது இலக்கணத்தை வலியுறுத்துதல் மூன்றுஞ் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூர்ணிக்கொத்து :

1 இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினுலே அறிவுயிர் உண்டு.
2 எனது உடல் என்று பொருட்பிறிதின்கிழமையாகச் சொல்லுகையினுலே, உடற்கு வேருய் உயிர் உண்டு.

3 ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேருய் உயிர் உண்டு.

4 கனவுடலே விட்டு நனவுடலிலே வருகையினுலே, அக்கனவுடற்கு வேருய் உயிர் உண்டு.

5 நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்பும் தொழிலும் இல்லாதபடியினுலே, பிராணவாயுவுக்கு வேருய் உயிர் உண்டு.

6 மறந்து மறந்து நினைக்கிறபடியினுலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேருய் உயிர் உண்டு.

7 எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினுலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேருய் உயிர் உண்டு.

## 2. இலக்கணவியல்

### நான்காஞ்சூத்திரம்

*அந்தக் கரணம் அவற்றினென் றன்றவை*
*சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா(து)*
*அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.*

எ-து. சூ-ம். எ-னின், இதுவும் அது.

எ-து. க-ரை. எ-னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பிரமாணம் இலக்கணம் இரண்டானும் பொருளுண்மை பெறற்பாற்று என்னும் முறைமை பற்றி மேற்பிரமாணத்தால் பெறுவிக்கப்பட்ட பதி பாச பசுக்களுக்கு இலக்கணம் எதிர்நிரல்நிறையாக

வைத்துக் கூறுவான் தொடங்கி அவற்றுள் இது மேலடுக்க நின்ற ஆன்மாவின் இலக்கணம் கூறுதல் உணர்த்துதல் நுதலிற்று.

சூர்ணிக்கொத்து :

1 அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினலன்றித் தொழில் இல்லாதபடியினலே, அந்தக் கரணங்களுக்கு வேருய் உயிர் உண்டு.

2 மல மறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

3 உயிர் மூன்றவத்தைப்படும்.

ஐந்தாஞ்சூத்திரம்

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்(கு)
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே.

எ - து, சூ - ம். எ - னின், இவ் ஆன்மாக்களிடத்துத் தமது முதலுபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

எ - து. க - கரை. எ - னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஐந்து அவத்தைப்படும்வழிக் கருவியும் உயிரும் அமைச்சும் அரசும் ஏய்ப்ப நிற்பின்அவையே அமையுமாகலான் முதல்வனல் ஆண்டைக்கு ஆகற்பாலதொரு பயனில்லை போலும் என்னும் கடாவை ஆசங்கித்து ஆண்டும் இன்றியமையாது வேண்டப் படுவதாய முதல்வனுடைய உதவியை அறிவிக்கு முகத்தானே இரண்டாஞ்சூத்திரத்தின் ஓதிய துணைக்

காரணம் முதற்காரணங்களதிலக்கணம் உணர்த்துதல் இவ் அஞ்சாஞ்சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூர்ணிக்கொத்து :

1 உயிராலே தத்துவங்களெல்லாம் தொழில் செய்யும்.

2 அரனுலே உயிர்களெல்லாம் அறியும்.

ஆருஞ்சூத்திரம்

உணர்உரு அசத்தெனின் உணரா நின்மையின்
இருதிறன் அல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.

எ-து. சூ-ம். எ-னின், சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்துதல் நுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின், சூத்திரக்கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்- மேல் ஐந்து சூத்திரத்தானும் கூறிப் போந்த பொருள்களுள் யாது சத்து யாது அசத்து என்னும் ஐயம் நீக்குதற்குச் சத்தினியல்பும் அசத்தினியல்பும் இவையென அவ்விரண்டும் இலக்கணத்தால் தம்முள் மயங்காதவாறு வரைந்துவைத்து உணர்த்தி உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யுமுகத்தானே இலக்கண ஒத்துள் கூறுதற்கு எஞ்சிநின்ற பதிப்பொருளது இலக்கணம் கூறுதல் இவ்வாறும் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூர்ணிக்கொத்து :

1 உயிரறிவினலே அறியப்பட்டது எல்லாம் அழியும்.

2 அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

# உ. உண்மை அதிகாரம்

## 3. சாதனவியல்

### ஏழாஞ்சூத்திரம்

யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியா(து) அசத்தில(து) அறியா(து)
இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா.

எ-து. சூ-ம். எ-னின், மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தூலாருந்ததி நியாயம்பற்றி மேலை ஆறு சூத்திரங்களினும் சிவாகமங்களில் கூறப்படும் முப்பொருள்களது பொதுவியல்பு பிரமாணமுகத்தானும் இலக்கணமுகத்தானும் ஆராய்ச்சி செய்து உணர்த்திய ஆசிரியர், அம்முப்பொருள்களது சிறப்பியல்பு எனப்படும் உண்மை சாதனமுகத்தானும் பயன்முகத்தானும் ஆராய்ச்சிசெய்துணர்த்துவான் புகுந்து முதற்கண் மூன்றுசூத்திரங்களான் அவற்றை அறிந்து அதனான்ஆய பயன் பெறுதற்கு ஏதுவாகிய சாதனம் கூறிய தொடங்கினார். அவற்றுள் இச்சூத்திரம் உணர்உரு அசத்து எனவும், இருதிறனல்லது சிவசத்து எனவும் மேலைச்சூத்திரத்தான் வரைசெய்துணர்த்தியவழி அங்ஙனமறியும் பொருள் அவ்விரண்டினுள் ஒன்றோ வேறோ என்னும் ஐயப்பாட்டின்கண் அவ்விரண்டினுள் ஒன்றாகற்பாலது என்பார் மதம் பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்துக்குப் புறனாக எடுத்து ஓரொழிபாகிய சதசத்தினியல்பு வரைசெய்து உணர்த்துமுகத்தானே சாதித்துப்பயன்

பெறுதற்குரிய அதிகாரியினியல்பாவது இது என்பது உணர்த்துதல் நுதலிற்று என்றவாறு.

சூர்ணிக்கொத்து :

1 அரன் பாசத்தை அநுபவியான்.
2 பாசம் அரனை அநுபவியாது.
3 உயிர் அவ்வரனை அடையும்; அநுபவிக்கும்.

எட்டாஞ்சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்(டு)
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.

எ-து. சூ-ம். எ-னின், ஞானத்தினை உணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அவ் ஆன்மாவின் அறிவாவது மேல் இருதிறன் என்றதனுள் அசத்தான் விளங்கி அசத்தின்பால் உளதாய் அசத்தினை அறிந்துநின்றவாறும் சத்தான்விளங்கிச் சத்தின்பால் உளதாய்ச் சத்தினை அறிந்து நிற்குமாறும் தரிசிக்கும் முறைமையினை உணர்த்துமுகத்தான் சாதித்தற்குரிய அதிகாரம் தனக்கு உண்டென மேலைச்சூத்திரத்தான் அறிந்த ஆன்மாவுக்குச் சாதித்ததனல் பெறப்படும் பயனும் அதற்குச் சிறந்த சாதனமாவதும் அது வருவாயும் இவையென்பது உணர்த்துதல் இவ் எட்டாம் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூர்ணிக்கொத்து:

1 உயிருக்கு நல்லறிவு தவத்தினலேயே வரும்.

2 உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.

3 உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினுலே தன்னையும் அறியமாட்டாது.

4 உயிர் பஞ்சேந்திரியங்களிலே ப ்று அற்ருல் தன்னையும் அறியும்.

ஒன்பதாஞ்சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினில் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழ லாம்பதி விதிஎண் ணும் அஞ்செழுத்தே.

எ - து. சூ - ம். எ - னின், ஆன்மசுத்திபண்ணுமா றுணர்த்துதல் நுதலிற்று.

எ - து. க - கரை. எ - னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தம்முதல் குருவுமாய் உணர்த்தக் கேட்டு அதனைச் சிந்தனைசெய்துணருமாறு உணர்த்து முகத்தான் ஐம்புலவேடரின் வளர்ந்த வாலாமை நீக்கி உயிர் தன்னைத் தூய்மைப்படுத்துமாறு உணர்த்துதல் இவ்ஒன்பதாஞ் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூர்ணிக்கொத்து:

1 உயிர் அரன் ஞானத்தினுலேயே அரனைக் காணும்.

2 உயிர் பாசத்திலே பற்றற்ருல், அரன் வெளிப் படுவன்.

3 பஞ்சாக்ஷர செபம்பண்ணினுல், வாசனுமலம் போகும்.

## 4. பயனியல்

### பத்தாஞ்சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகன் ஆகி இறைபணி நிற்க
மலம்மாயை தன்னொடு வல்வினை இன்றே.

எ - த். சூ - ம். எ - னின், பாசக்ஷயம் பண்ணு மாறு உணர்த்துதல் நுதலிற்று.

எ - து. க - ரை. எ - னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மேல், ஏழாஞ்சூத்திரம் முதலிய மூன்றானும் முறையே சாதிக்கும் பொருளதியல்பும் சாதித்துப் பெறப்படும் பொருளதியல்பும் சாதிக்கும் ஆறும் உணர்த்தி, இனி அச்சாதனத்தானாய பயனியல்பு வகுத்துக் கூறுவான் எடுத்துக்கொண்டார். அப்பயனாவது பாசவீடும் சிவப்பேறும் என இருவகைப்படும். அவ்விரண்டனுள் சுட்டுணர்வினலாகிய ஏகதேச நோக்கத்தைத் திருஅஞ்செழுத்தினது உச்சரிப்பால் பற்றறத் துடைத்தவழிப் பெறப்படுவதாகிய மேலைச்சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்திப் பயனாகிய பாசவிடுதியைச் செய்துகொள்ளுமாறு மேற்சிந்தனை செய்த பொருளைத் தெளியும் ஆறு உணர்த்துமுகத்தான் உணர்த்துதல் இப்பத்தாம் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூர்ணிக்கொத்து:

1 அரனுடன் ஒன்றாகி நில்.

2 உன் தொழிலெல்லாம் அரன்பணி என்று கொள்.

பதினொராஞ்சூத்திரம்

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

எ - து. சூ - ம். எ - னின், பரமேசுரனது சிபாதங்களை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

எ - து. க - ரை. எ - னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : அங்ஙனம் ஏகனாகி இறைபணிநிற்பார்க்கு அறிவு இச்சை செயல்கள் விடயித்தற்கு உரியதோர் இயைபு ஆண்டுப் பெறப்படாமையின் விடயமாவ தொன்றில்லைபோலும் என்னும் வாதிகளை நோக்கி விடயித்தலில்வழி ஆண்டுப் புத்தர் கூறும் ஆலய விஞ்ஞானம்போலச் சூனியமாம் எனப்பட்டுக் குணம் சூனியமாகவே குணியும் சூனியமாய் முடியும் ஆகலான் அஃது ஏலாமையின் ஆண்டு அவை இயைபு பற்றி விடயிக்குமாறு உணர்த்துமுகத்தானே பயன் இரண்டனுள் முடிவாய் எஞ்சி நின்ற சிவப்பேறு கூடுதலாய நிட்டையின் இயல்புணர்த்துதல் இப்பதினொராஞ் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூர்ணிக்கொத்து :

1 ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

2 அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கமாய்ப்போவன்.

### பன்னிரண்டாஞ்சூத்திரம்

செம்மலர் நோன்தாள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே.

எ-து. சூ-ம். எ-னின், அசிந்திதனுய் நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அயரா அன்பின் அரன்கழல் சென்ற முத்தர்க்குச் சிவன்முத்திநிலேக்கண் அவ்வறிவு இச்சை செயல்கள் ஒரோவழிப் புறத்துச் செல்லுங் கால் அவை செல்லுமிடம் இவை என்பது உணர்த்து முகத்தான் வாக்குமனுதீதமாய்ப் பத்தியினுன் மறவாதேத்த நின்ற முதல்வனே வாக்குமனக் கோசரமாம்படி தெளியக்கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் இப் பன்னிரண்டாம் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூர்ணிக்கொத்து :

1 மும்மலங்களேயும் களேக.
2 சிவஞானிகளுடனே கூடுக.
3 சிவஞானிகளேயும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக.
4 வழிபடாமையை ஒழிக.

---